# பின்மாரி மலர்

மரம்: 20 கனி: 06 பிப்ரவரி 2021 ஆசிரியர்: J. செல்வக்குமார்

(Private Circulation Only)

ஆண்டு சந்தா: ₹25/-

தனிப் பிரதி: ₹5/-



'எழுப்புதல் வீட்டு ஜெபக் குழு'

# மரித்துப் போனதை உயிர்ப்பிக்கிற தேவன்!



மரித்துப் போனதை உயிர்ப்பிக்கிற தேவன்!



2021 எழுப்புதலின் வழிகள்!

# கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே,

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தில் அன்பின் வாழ்த்துக்கள்!

கர்த்தர் இந்த ஆண்டிற்கு, **உங்களுக்கு திரும்ப அளிப்பேன். (யோவேல் 2:25)** என்று வாக்கு கொடுத்திருக்கிறார். இயேசு கிறிஸ்து உலகில் வாழ்ந்த காலத்தில், யவீரு என்கிற ஜெப ஆலய தலைவன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவனது 12 வயதான மகளுக்கு, திடிரென்று மரண போராட்டம். உடனே யவீரு, தனது மகளின் சுகத்திற்காக இயேசு கிறிஸ்துவை அழைத்து வர செல்கிறான்.

இயேசு கிறிஸ்துவை அழைத்து வரும்போது, அவனது வீட்டிலிருந்து ஒரு செய்தி வருகிறது. அவனது மகள் மரித்துவிட்டாள் என்று. இயேசு கிறிஸ்து யவீருவை பார்த்து, **பயப்படாதே, விசுவாசமுள்ளவனாயிரு (மாற்கு 5:36)** என்று கூறி விசுவாசத்தை வர்த்திக்கப் பண்ணுகிறார். விசுவாசத்தோடு கடந்து செல்லும் போது, அங்கு செத்துப்போனவளை எப்படி உயிர்ப்பிக்க முடியும் என்று நகைக்கிற கூட்டம். இதற்கு மத்தியில் அவைகளை உதறிவிட்டு இயேசு கிறிஸ்து அவர்களது வீட்டிற்குள் சென்று யவீருவின் குமாரத்தியை உயிர்ப்பிக்கிறார்.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே இந்த எழுப்புதலின் நாட்களில், யவீருவை போல நாமும் மரித்துப் போன சூழ்நிலையை சந்திக்கலாம்.

திடன்கொள்ளுங்கள், சர்வ வல்லமையுள்ள தேவன் நம்மோடு இருக்கிறார். எதிர்கொள்கிற காரியத்தை குறித்து திகைத்து போகாதீர்கள், பயப்படாதீர்கள்! கர்த்தர் மேல் விசுவாசமுள்ளவர்களாயிருங்கள். எல்லாம் முடிந்துவிட்டது என்று எண்ணாதீர்கள்.

நம்முடைய தேவன் உயிர்ப்பிக்கிறவர். நீங்கள் ஜெபிக்கிற போது, உங்களோடு கூட விசுவாசமுள்ளவர்களை சேர்த்துக்கொள்ளுங்கள். அவிசுவாசிகளிடம் காரியங்களை பகிர்ந்து கொள்ளாதீர்கள். அவர்கள் மூலம் உங்களுக்கு நடக்க வேண்டிய காரியங்கள் தடைப்படும். அவர்களை அகற்றிவிடுங்கள்.

இந்த மாதமும் தேசத்தின் தலைவர்களுக்காக, தமிழ்நாடு சந்திக்க இருக்கிற தேர்தலுக்காக அதிகம் ஜெபிப்போம். மரித்துப்போன காரியங்களையும் உயிர்ப்பிக்கிறவர் நம்முடைய தேவன்.

கிருபை உங்களோடிருப்பதாக!

– உங்கள் சகோதரன்.






# ஜெபக் குறிப்புகள்!

WEEK 1 பிப்ரவரி 5 முதல், பிப்ரவரி 11 வரை.



🔹 **உலக**ம் முழுவதும் கொரோனாவால் **அதிகம்** பாதிக்கப்பட்டது ஐரோப்பா தேசங்களிலுள்ள முதியோர் காப்ப**கங்கள்.** பெல்ஜியம் தேசத்தில் மட்டும் முதியோர் காப்பகங்களில் கொரோனாவால் இறந்தவர்கள் 11,066 பேர். மேலும் இத்தாலி, பிரான்ஸ், பிரிட்டன் போன்ற தேசங்களிலும் திரளான முதியோர், காப்பகங்களில் இறந்துள்ளனர். இவைகள் தடுக்கப்பட, முதியோர்கள் பாதுகாக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

🔹 உலகளவில் புலம் பெயர்ந்து வசிப்போரில் முதலிடத்**தில்** இருப்பது இந்தியர்கள். 1.80 கோடி இந்தியர்கள் பல்வேறு தேசங்களில் வசிக்கின்றனர். வெளி தேசத்தில் வாழும் இந்தியர்களுக்கு எதிரான வன்முறைகள் தடுக்கப்பட, இந்தியர்களின் வாழ்வாதாரம் உயர, அவர்கள் பாதுகாக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

🔹 டெல்லியில் 40,000த்திற்கும் மேற்பட்டோரிடம் ஆன்லைனில் பல கோடி ரூபாய் மோசடி நடைபெற்றுள்ளது. இதற்கு 2 சீன தேசத்தின் பெண்கள் காரணமாய் இருந்தனர். இத்தகைய சூழ்ச்சிகள் முறியடிக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**



🔹 இந்தியாவில் தடைசெய்யப்பட்ட அநேக காரியங்களி**ல்** சில மீண்டும் தலை தூக்குகிறது. அரசாங்கம் தடைசெய்த பா**ன்** பொருட்கள், புகையிலை பொருட்கள், பணம் வைத்து நடைபெறும் போட்டிகள், சூதாட்டங்கள் பெருகி வருகின்றன. கடந்த மாதத்தில் ஆந்திராவில் பொங்கல் தினங்களில் 3 நாட்களில் நடைபெற்ற சேவல் பந்தயங்களில் ரூ.200 கோடிக்கு மேல் பணம் புரண்டுள்ளது. இத்தகைய காரிய**ங்கள்** முற்றிலும் தடைசெய்யப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**




🔹 இந்தியாவில் குறுந்தொழில் நிறுவனங்கள் மூலம் கோடிக்கணக்கான குடும்பங்கள் வாழ்ந்து வருகிறது. சமீபத்தில் ஏற்பட்ட சட்டதிட்டங்கள் மூலம் 45% குறுந்தொழில்கள் செயல்படமுடியாமல் தவிக்கின்றன. இதனால் கோடிக்கணக்கானோர்

பாதிக்கப்பட்டு வருகின்றனர். இவைகள் தடுக்கப்பட, இவர்களுக்கு எதிரான தீர்மானங்கள் மாற்றப்பட, இத்தொழிலை நம்பி இருக்கிற அனைவரையும் கர்த்தர் பாதுகாத்து நடத்தக் கருத்தாய் **ஜெபிப்போம்**.



🔷 கால சூழ்நிலை மாற்றம் இந்தியாவில் தென் மாநிலங்களில் பெரும் பாதிப்பை ஏற்படுத்தி வருகிறது. ஆதீத வெப்பம், சீரற்ற வானிலை, மழைப் பொழிவில் மாற்றம், மழைப் பொழிவில் சீரற்ற தன்மை நிலவி வருகிறது. இதனால் தென்னிந்தியாவில் வெள்ள அபாயம் அதிகரித்துள்ளது. இந்த தீவினைகள் நீங்கும்படி கர்த்தரிடம் மன்றாடி **ஜெபிப்போம்.**

🔷 பிசாசானவன் பொய்யனும், பொய்க்கு பிதாவுமாயிருக்கிறான் என்றும் அவன் திருடன் என்றும் வேதாகமத்தில் வாசிக்கிறோம். இச்சையை பயன்படுத்தி பிசாசானவன் அநேகரை விழத் தள்ளுகிறான். இந்தியாவில் தற்சமயம் ஹனிடிராப் கலாச்சாரம் பெருகி வருகிறது. இதற்கு அடிமைப்பட்டுள்ள அநேக ஐசுவரியவான்கள் தங்களது சொத்துக்களையும், கவுரவத்தையும் இழந்து வருகிறார்கள். இந்த பொல்லாத கலாச்சாரம் முற்றிலும் அழிக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

## பலவானை முந்தி கட்டுவோம்!

🔶 எழுப்புதலை தடுப்பதற்கு, மட்டுப்படுத்துவதற்கு நமது சத்துருவாகிய பிசாசானவன் அநேக தந்திரங்களை பயன்படுத்துகிறான், அதில் ஒன்று மாயையான அன்பு. இதனால் அநேக வாலிபர்கள் பாதிக்கப்படுகின்றனர். இதற்கு காரணமாயிருக்கிற பொல்லாத ஆவியாகிய வானராக்கினியின் கிரியைகள் அழிக்கப்பட **ஜெபிப்போம்.**

🔶 தேசத்தில் எகிப்தின் பில்லிசூன்யங்கள், மந்திரங்களை பெருக பண்ணுகிற அந்தகார லோகாதிபதிகளின் தந்திரங்கள், கிரியைகள் அழிக்கப்பட **ஜெபிப்போம்.**



FAMILY PRAYER POINTS

## குடும்பங்களுக்காக ஜெபியுங்கள்!



🔷 கர்த்தர் குடும்பங்களை எழுப்புதலுக்காக தெரிந்தெடுத்திருக்கிறார். இதனை அறிந்து பிசாசானவன் தற்சமயம் குடும்ப சமாதானத்தை சீரழிக்க குடும்ப தலைவிகளின் மத்தியில் தற்கொலை எண்ணத்தை தூண்டிவிடுகிறான். பல குடும்பங்கள் இதனால் பாதிக்கப்பட்டுள்ளது. இந்த கிரியைகள் அழிக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**




🔷 குடும்பங்களில் தற்காலத்தில் சமுதாயத்தில் தங்களது ஸ்தானத்தை நிலை நாட்டுவதற்காக, வீண் பெருமைக்காக செலவிடும் செலவுகள் அதிகரித்துள்ளது. கடன் வாங்கி அவசியமில்லாமல் செய்யும் காரியங்கள் பெருகிவருகிறது. அவைகள் தடுக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

Revival

## ஆவிக்குரிய எழுப்புதலுக்காக ஜெபியுங்கள்!

🔶 இந்தியாவின் எழுப்புதலுக்கு காரணமாயிருந்த திருநெல்வேலி திருமண்டலத்தில் பேராயர் தேர்தல் நடக்க உள்ளது. கர்த்தருக்கு சித்தமானவர்கள், எழுப்புதல் தரிசனமுள்ளவர்கள், பிசாசை மேற்கொண்டு ஜெயம் எடுக்கதக்க அபிஷேகத்தால் நிரப்பபட்ட ஒரு நல்ல மேய்ப்பனை கர்த்தர் தந்தருள, யாவரும் இணைந்து மன்றாடி **ஜெபிப்போம்.**

🔶 சபைகளுக்குள் புகுந்துள்ள நாகரீக உபதேசங்கள், செழிப்பின் உபதேசங்கள் சுய உபதேசங்கள் தடுக்கப்பட்டு, வேத வசனத்தின் அடிப்படையில் போதனைகள் சபைகளில் வெளிப்படக் **ஜெபிப்போம்.**

ISRAEL PRAYER POINTS

## இஸ்ரேல் ஜெபக்குறிப்பு!

🔹 இஸ்ரேல் தேச சமூக ஊடகங்களில் வன்முறை உரையாடல் பெருகி வருவதாக 86% இஸ்ரேலியர்கள் எண்ணுவதாக இஸ்ரேலிய வலைதள அமைப்பு கூறி உள்ளது. வன்முறைகள் தடுக்கப்பட, அதனால் பெருகும் தீவினைகள் முற்றிலும் முறியடிக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

🔹 ஜெப ஆலயங்களுக்கு எதிராக அடுத்த தாக்குதல், ஜெப ஆலய வலைதளத்தை முடக்கி, அங்கிருந்து ஒளிபரப்பப்படும் தேவ செய்திகளை தடுப்பது. ஜெப ஆலய வலை தளங்கள் அந்நியர்களால் பாதிக்கப்படாமல் காப்பாற்றப்படும்படிக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

# உலக நாடுகளுக்காக ஜெபியுங்கள்!



PRAY FOR WORLD

◆ இந்தோனேசியா தேசத்தில் கடந்த மாதம் தொடர்ந்து பாதிப்புகள், விமான விபத்து, நிலநடுக்கம், எரிமலை வெடிப்பு மற்றும் கொரோனா பரவல் அதிகரிப்பு இந்தோனேசியாவில் அதிகரித்து வரும் பாவ கிரியைகள் அழிக்கப்பட்டு, ஜனங்கள் மனந்திரும்ப, தேசத்தில் உண்டாகும் பாதிப்புகள் தடுக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

◆ ஏமன் தேசத்தில் பஞ்சத்தால் கடுமையான ஊட்டசத்து குறைபாடு ஏற்பட்டுள்ளது. அங்கு நடக்கும் யுத்தத்தால் 80% மக்கள் பாதிக்கப்பட்டுள்ளனர். 1 லட்சத்திற்கும் அதிகமானோர் உயிர் இழந்துள்ளனர். ஏமனில் யுத்தம் நிறுத்தப்பட்டு, பஞ்சம் மாறி ஜனங்கள் மறுபடியும் இயல்பான வாழ்க்கைக்கு திரும்பக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

◆ வெனிசுலா தேசத்தில் முறைகேடு செய்து பெறப்பட்ட சுமார் 10 பில்லியன் டாலர் தொகையானது சுவிஸ் நாட்டிலுள்ள 30 வங்கிகளில் நூற்றுக்கணக்கான கணக்குகளில் சேமிக்கப்பட்டுள்ளது கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. வெனிசுலா தேசத்திலுள்ள முறைகேடுகளுக்கு கர்த்தர் முற்றுப்புள்ளி வைக்கப்படவும், நீதி நிலைநாட்டப்படவும் கருத்தாய் **ஜெபிப்போம்.**

## பலவானை முந்தி கட்டுவோம்!

WEEK 2

பிப்ரவரி 12 முதல், பிப்ரவரி 18 வரை.

◆ தேசத்தில் சோதோம் கொமோரா பாவத்தை பெருக பண்ணி, தேவ கோபாக்கினையை தூண்டுகிற பொல்லாத ஓரினச்சேர்க்கையின் ஆவியின் கிரியைகள் முற்றிலும் அழிந்து சங்கரிக்கப்பட **ஜெபிப்போம்.**

◆ தேசத்தில் அநீதியையும், அக்கிரமத்தையும் பெருகபண்ணி, திக்கற்றவர்கள் மற்றும் விதவைகளை கண்ணீர் விட வைக்கிற பொல்லாத சாத்தானின் தந்திரங்கள் அழிக்கப்பட, பொய்யனின் தந்திரங்கள் வெளியரங்கமாக்கப்பட **ஜெபிப்போம்.**






# ஜெபக் குறிப்புகள்!

◆ **இந்திய** பாராளுமன்றத்தில் தற்சமயம் நடைபெற்று வரும் நாடாளுமன்ற பட்ஜெட் கூட்டத்தொடருக்காக **ஜெபிப்போம்.** கடந்த ஜனவரி 29ம் தேதி ஆரம்பமான இந்த கூட்டத் தொடர் ஏப்ரல் 8 வரை நடைபெற உள்ளது. பொது மக்களுக்கு ஆசீர்வாதமான, நன்மை தரக் கூடிய பட்ஜெட் அமையக் கருத்தாய் ஜெபிப்போம். கர்த்தருடைய ஆளுகை நிதியமைச்சகத்தின் மீது இறங்கி வர **ஜெபிப்போம்.**

◆ வருகிற ஏப்ரல் மற்றும் மே மாதத்தில் தமிழ்நாடு, கேரளா, புதுச்சேரி, அசாம் மற்றும் மேற்கு வங்காளத்திற்கு சட்டசபை தேர்தல் நடைபெற இருக்கிறது. தேர்தலை நடத்துகிற தேர்தல் அதிகாரிகள் மீது தேவ ஆளுகை கடந்து வர, உண்மையும், உத்தமமுமாய் தேர்தல் நடத்துவதற்கு தேவையான தைரியத்தையும், உறுதியையும், பாதுகாப்பையும் கர்த்தர் கட்டளையிடக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

◆ வரப்போகிற சட்டமன்ற தேர்தலில் தமிழகத்தில் மொத்தம் 6 கோடி 26 லட்சம் பேர் வாக்களிக்க உள்ளனர். ஒருவர் கூட தங்களது வாக்கை விற்காதபடிக்கு, வாக்காளர்கள் விழிப்புணர்வு உண்டாக, தேர்தலில் அனைவரும் வாக்களித்து தேவ திட்டத்தை நிறைவேற்றக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

◆ தேசத் தலைவர்களை, தங்களது பணத்தால், ஆள் பலத்தால் மிரட்டி தங்களது காரியங்களைச் செய்ய வைக்க எத்தனிக்கும் பொல்லாத வர்த்தக கூட்டணிகள் முற்றிலும் அழிக்கப்பட, அவர்களது சதித்திட்டங்கள் முற்றிலும் அழிக்கப்பட, ஒருவருக்கு எதிராக ஒருவர் பட்டயம் எழும்பி அவர்கள் வீழ்ந்து போக, தேசங்கள் பாதுகாக்கப்படக் கருத்தாய் ஜெபிப்போம். தேசம் மீண்டும் அடிமைத்தனத்திற்குள் தள்ளப்படாமல் இருக்கக் கருத்தாய் ஜெபம் செய்வோம்.



◆ தமிழ்நாட்டில் குடிவெறியின் கிரியைகள் அழிக்கப்பட ஜெபிப்போம். பூரண மதுவிலக்கு தமிழ்நாட்டில் உண்டாகவும், எழுப்புதலுக்கு தடை உண்டுபண்ணுகிற மதுபான உற்பத்தி நிலையங்கள் மூடப்பட்டு அதின் விற்பனை நிலையங்கள் முடங்கி போகக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

சமீப நாட்களில் பெருகி வருகிற கள்ள சந்தையில் விற்கப்படும் மதுபானங்கள் தடுக்கப்பட **ஜெபிப்போம்.**

◆ தமிழகத்தில் 138 சிறைசாலைகள் உள்ளன. இதில் தடைசெய்யப்பட்ட கஞ்சா, செல்போன் உள்ளிட்டவைகள் தடையின்றி கிடைக்கின்றன. இதனால் வெளி உலகத்தோடு தொடர்பு கொண்டு அடியாட்களின் உதவியோடு கொலை, கொள்ளை போன்ற குற்ற சம்பவங்கள் திட்டமிடப்பட்டு நடந்தேறுகின்றன. கடந்த மாதம் மாத்திரம் 40 செல்போன்கள் பறிமுதல் செய்யப்பட்டுள்ளன. சிறைகளில் காணப்படுகிற இந்த தேச விரோத செயல்கள் தடுக்கப்பட, இச்செயல்களுக்கு துணை போகிற சிறை அதிகாரிகள் மனம் திரும்பக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

◆ கடந்த மாதம் இந்தியாவில் பறவை காய்ச்சல் மிக தீவிரமாய் மாநிலங்களுக்குள் ஊடுருவி லட்சக்கணக்கான பறவைகள் பாதிக்கப்பட்டும், அழிக்கப்பட்டும் வந்தன. இதற்கும் வலுசர்ப்பத்தின் தேசம்தான் காரணம் என அறியப்பட்டிருக்கிறது. மனிதர்கள் மீது மாத்திரம் அல்ல மிருகங்கள் மீதும், பறவைகள் மீதும் உண்டாகி உள்ள தீங்குகள் நிறுத்தப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

## உலக நாடுகளுக்காக
### ஜெபியுங்கள்!

PRAY FOR WORLD

◆ சீனாவில் 10 கோடி பேருக்கு நச்சு கலந்த குடிநீர் விநியோகித்திருப்பதாக ஆய்வறிக்கை கூறுகிறது. பொது ஜனங்களுக்கு விரோதமான காரியங்கள் தடுக்கப்பட, பேரழிவுகள் தடுக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

◆ கடந்த சில ஆண்டுகளாக ஆப்பிரிக்கா தேசமாகிய காங்கோவில் உள்நாட்டு போர் நடந்து வருகிறது. அங்குள்ள கிளர்ச்சியாளர்களுக்கும் அந்நாட்டு அரசுக்கும் ஏற்படும் மோதலில் ஆயிரக்கணக்கான அப்பாவி பொது மக்கள் உயிரிழக்கின்றனர். கடந்த மாதம் 46 பேர் மரித்துள்ளனர். காங்கோ தேசத்தில் உள்நாட்டு கலவரம் நிறுத்தப்பட, அநியாய மரணங்கள் தடுக்கப்பட **ஜெபிப்போம்.**



FAMILY PRAYER POINTS

## குடும்பங்களுக்காக
### ஜெபியுங்கள்!



◆ குடும்பங்களில் தற்காலத்தில் கருகலைப்பு செய்வதை ஒரு குற்றமாக எண்ண தவறுகிறார்கள். இதனால் குடும்பங்கள் சாபத்திற்குள்ளாக செல்கிறது. இந்த சாபத்தீடான காரியங்கள் முற்றிலும் தடைச்செய்யப்பட, பெற்றோர் இந்த காரியத்தில் உணர்வடைந்து, அந்த தீங்கிற்காக மனஸ்தாபப்பட்டு, தங்களது சாபத்தை விலக்கி கொள்ள **ஜெபிப்போம்.**

◆ தற்போது பிசாசனவன் குடும்ப உறவை தகர்ப்பதற்காக, வாலிபர்கள் மத்தியில் குடும்பங்களை குறித்த கசப்பான உணர்வுகளை தூண்டி, சேர்ந்து வாழும் கலாச்சாரத்தை அதிகரிக்கப்பண்ணுகிறான். இந்த தீங்கு தேசத்தை விட்டு அகலும்படிக்கு, இதற்கு எதிரான சட்டங்கள் உருவேற்றப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**



REVIVAL

## ஆவிக்குரிய எழுப்புதலுக்காக
### ஜெபியுங்கள்!

◆ ஆவிக்குரிய எழுப்புதலுக்கு முக்கிய பங்கு வகிப்பது திருச்சபை. திருச்சபையின் ஐக்கியம் மிக முக்கியமானது. ஐக்கியத்தை சீர்குலைத்து, ஒருவருக்கு விரோதமாய் மற்றவர்களை செயல்பட வைத்து பகையை தூண்டி, பரியாசம் செய்ய வைக்கிற பிசாசின் தந்திரங்கள் முறிக்கப்பட **ஜெபிப்போம்.**

◆ தனிமனித சுதந்திரம் என்று கூறி கர்த்தர் அருவருக்கிற சில பாவ பழக்கவழக்கங்களை திருச்சபை அனுமதிக்கிறது. அவைகள் தடைசெய்யப்பட, பரிசுத்த குலைச்சல்கள் அகற்றப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

ISRAEL PRAYER POINTS

## இஸ்ரேல்
### ஜெபக்குறிப்பு!

◆ கடந்த மாதங்களில் அமெரிக்கா தேசத்தின் காபிட்டல் பாராளுமன்றம் சூறையாடபட்டு வன்முறை தாக்குதல் நடத்தப்பட்டது. அது போல இஸ்ரேல் தேசத்தின் பாராளுமன்றத்தில் நடைபெறலாம் என 40% இஸ்ரேலியர்கள் நம்புகிறார்கள். இஸ்ரேலில் அத்தகைய தாக்குதல்கள் வன்முறை செயல்கள் நடைபெறாமல் தடுக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

◆ இஸ்ரேல் தேசத்தின் எழுப்புதலை முன்காட்டி, தங்களது வயிற்றுபிழைப்பை நடத்துகிற பொல்லாத ஊழியர்களின் தந்திர திட்டங்கள் முறியடிக்கப்பட, இஸ்ரவேலிலுள்ள திருச்சபைகள் உயிர்மீட்சி அடைய, இஸ்ரவேலர்கள் அனைவரும் இயேசு கிறிஸ்துவை இரட்சகராக, மீட்பராக, ராஜாவாக ஏற்றுக்கொள்ளக் கருத்தாய் **ஜெபிப்போம்.**



# தினம் ஒரு ஜெபக்குறிப்பு!

**பிப்ரவரி 1** – இன்று கடலோரக் காவல்படை தினம். இதில் பணிபுரியும் 5,440 பேரும் காக்கப்பட, இரட்சிக்கப்பட, பணியில் உண்மையாய் செயல்பட **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 2** – இன்று உலக சதுப்பு நில தினம். உலகின் நிலபரப்பில் 6% கொண்டது. இந்த சதுப்பு நிலங்கள் பாதுகாக்கப்பட, அவைகளினால் உண்டாகும் நன்மைப் பெருக **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 3** – இந்த வாரம் உலக மதங்களுக்கிடையே நல்லுறவை வளர்த்துக்கொள்ளும் நாட்கள். இந்நாட்களில் மத நம்பிக்கையின் அடிப்படையில் நடைபெறும் கலவரங்கள் தடுத்து நிறுத்தப்பட, ஐக்கியம் பெருக **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 4** – இன்று உலக புற்றுநோய் தினம். புற்றுநோயால் ஆண்டுதோறும் 10ல் 1 நபர் பாதிக்கப்படுகின்றனர். இந்த சூழ்நிலை மாற, புற்றுநோயால் பாதிக்கப்பட்டோர் சுகமடைய **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 5** – உலக நெட்வொர்க்கிங் (கட்டமைப்பு) வாரம். உலகத்தின் பரிணாம வளர்ச்சிக்கு நெட்வொர்க்கிங் மிகவும் அவசியமானது. இந்த தொழில் நுட்பம் மனு குலத்திற்கு கேடு விளைவிக்காமல் இருக்க **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 6** – இன்று அருணாச்சல பிரதேசத்திலுள்ள நியிஷி பழங்குடி இன மக்களின் பூரிபூத் திருவிழா. இந்த இன மக்கள் யாவரும் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டு இரட்சிக்கப்பட **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 7** – இன்று கிரெனடா தேசத்தின் சுதந்திர தினம். அங்கு வாழும் 1.2 லட்சம் ஜனங்களும் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டு இரட்சிக்கப்பட, எழுப்புதலின் அக்கினி அத்தேசத்தின் மீது கடந்து வர **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 8** – இன்றிலிருந்து இருதய மறுசீரமைப்பு வாரம் தொடங்குகிறது. தற்காலத்தில் இருதயம் சம்பந்தப்பட்ட நோய்கள், பாதிப்புகள் அதிகரித்து வருகிறது. அவைகள் தடுக்கப்பட **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 9** – இன்று மாரோனைட் சபை உண்டான தினம். இந்த மார்க்கத்தைச் சார்ந்த அனைவரும் இரட்சிக்கப்பட்டு மீட்கப்பட **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 10** – இன்று உலக பயிறு வகைகள் தினம். மனிதனின் வாழ்வாதாரத்திற்கும், ஊட்டசத்திற்கும் அவசியமான பயிறு வகைகள் பாதுகாக்கப்பட, அதிலுள்ள கலப்படங்கள் அகற்றப்பட **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 11** – இன்று உலக யூனானி மருத்துவ தினம். இத்துறையிலுள்ள மருத்துவர்கள் இயேசு கிறிஸ்துவை அறிந்துகொண்டு இரட்சிக்கப்பட **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 12** – இன்று அகில உலக பெண்கள் நலன் தினம். பெண்களின் நலனில் குடும்ப உறுப்பினர்கள் அக்கறை கொள்ள, பெண்களுக்கு எதிரான நோய் தாக்குதல்கள் தடுக்கப்பட **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 13** – இன்று உலக வானொலி நாள். உலகம் முழுவதும் தகவல்கள் பரிமாற்றத்தில் முன்னோடியாக உள்ள இந்த தொழில்நுட்ப துறையில் பணியாற்றும் அனைவரும் இரட்சிக்கப்பட்டு, மீட்கப்பட **ஜெபிப்போம்.**



**பிப்ரவரி 14** – இன்று வாலண்டைன் தினம். தேவன் விரும்பும் நல்ல குடும்ப ஒழுக்கத்திற்காக பாடுபட்ட வாலண்டைனின் தரிசனம் நிறைவேற ஒழுக்கமுள்ள குடும்பங்கள் கட்டப்பட **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 15** – இன்று மணிப்பூர் மாநிலத்தில் வாழும் நாகா ஆதிவாசிகளின் விதைப்பு திருநாள். இந்த இனத்திலுள்ள அனைவரும் இரட்சிக்கப்பட்டு, மீட்கப்பட **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 16** – இன்று லித்துவேனியா குடியரசு தேசத்தின் சுதந்திர தினம். அங்கு வாழும் 28 லட்ச ஜனங்களும் எழுப்புதலின் திட்டத்தில் செயலாற்ற, எழுப்புதலுக்கு அத்தேசம் ஆயத்தமாக **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 17** – இன்று கொசோவா தேசத்தின் சுதந்திர தினம். அங்கு வாழும் 19 லட்ச ஜனங்களின் இரட்சிப்பிற்காக, அத்தேசத்தின் ஆசீர்வாதத்திற்காகவும் **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 18** – இன்று காம்பியா (Gambia) தேசத்தின் சுதந்திர தினம். அங்கு வாழும் 19 லட்ச ஜனங்களின் இரட்சிப்பிற்காக, அத்தேசத்தின் ஆசீர்வாதத்திற்காகவும் **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 19** – நடன கலைஞர்களை ஊக்கப்படுத்தும் நாட்டியாஞ்சலி நிகழும் தேதிகள். நடன கலைஞர்களின் இரட்சிப்பு மற்றும் மீட்பிற்காக **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 20** – இன்று உலக சமூக நீதிக்கான நாள். சமூக நீதிகள் குறைந்து வரும் இந்நாட்களில் கர்த்தர் தமது நீதியை வெளிப்படுத்த **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 21** – இன்று அகில உலக தாய்மொழி தினம். பிள்ளைகள் தாய்மொழியின் அவசியத்தை உணர, மொழிகள் அழிக்கப்படுவது தடுக்கப்பட **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 22** – இன்று செயிண்ட் லூசியா தேசத்தின் சுதந்திர தினம். அங்கு வாழும் 2 லட்ச ஜனங்களும் கர்த்தருக்காக வைராக்கியம் பாராட்ட, எழுப்புதலுக்கு ஆயத்தப்பட **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 23** – இது பொறியாளர்கள் வாரம். அனைத்து துறை பொறியாளர்களும் ஆசீர்வதிக்கப்பட, இரட்சிக்கப்பட, மீட்கப்பட **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 24** – இன்று எஸ்தோனியா தேசத்தின் சுதந்திர தினம். அங்கு வாழும் 13 லட்ச ஜனங்களின் இரட்சிப்பிற்காக, தேவன் இல்லை என்று கூறும் ஜனங்கள் இயேசுவை ஏற்றுக்கொள்ள **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 25** – கடவுள் அவதாரம் என்று கூறி ஜனங்களை திசை திருப்புகிற மனிதர்கள் சந்திக்கப்பட, மனித வழிபாடுகள் முற்றிலும் நிறுத்தப்பட **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 26** – இன்று இஸ்லாமிய தேசங்கள் உருவாக்கிய மாஸ்டர் வாலஸ் ஃபார்ட் முகமது அவர்களின் பிறந்த நாள். இஸ்லாமிய தேசங்களில் கர்த்தருடைய ஆளுகை கடந்து வர, சமாதானம் உண்டாக **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 27** – இன்று டொமினிக்கன் தேசத்தின் சுதந்திர தினம். அங்க வாழும் ஒரு கோடி ஜனங்களின் இரட்சிப்பு மற்றும் மீட்பிற்காக **ஜெபிப்போம்.**

**பிப்ரவரி 28** – இன்று தேசிய அறிவியல் தினம். இந்தியாவில் அறிவியல் வளர்ச்சி ஆக்கபூர்வமாக அமைய **ஜெபிப்போம்.** அறிவியலாளர்கள் அனைவரும் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ள **ஜெபிப்போம்.**

# ஜெபக் குறிப்புகள்!

WEEK 3

பிப்ரவரி 19 முதல், பிப்ரவரி 25 வரை.

PRAYER POINTS



◆ மகாராஷ்டிராவில் 9.75 லட்சம் ஆட்டோக்கள் இயக்கப்படுகின்றன. இந்த கொள்ளை நோய் பாதிப்பினால் உண்டான ஊரடங்கால் ஜனவரி மாதம் வரை ஆட்டோ ஓட்டுநர்கள் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளனர். இவர்களது வாழ்வாதாரம் காக்கப்பட, அரசாங்கம் அவர்களுக்கு தேவையான உதவிகளை செய்யக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

◆ மும்பையில் சட்ட விரோதமாக குழந்தைகள் விற்பனை அதிகரித்து வருகிறது. ஏழை பெற்றோருக்கு ஆசை வார்த்தைகளை கூறி குழந்தைகளை வாங்கி, அதிக விலைக்கு குழந்தை இல்லா தம்பதிகளுக்கு விற்கின்றனர். இந்த சட்ட விரோத செயல்கள் தடுக்கப்பட, குழந்தை விற்பனை தடைசெய்யப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

◆ சமீப நாட்களாக இந்தியாவில் உணவு பொருட்களில் கலப்படம் அதிகரித்து விட்டது. ஏமாற்று வேலைகள், ஜனங்களை வஞ்சிக்கிற போலிகள் பெருகிவிட்டது. இதனால் மக்கள் ஏமாற்றப்பட்டு பாதிக்கப்படுகின்றனர். இந்த மக்கள் விரோத போக்கு தடுக்கப்பட, நிறுத்தப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**



◆ பிள்ளைகளை வைத்து பிச்சை எடுத்து பிழைப்பு நடத்துபவர்கள் பெருகி வருகின்றனர். சில கும்பல்கள் வலுக்கட்டாயமாக குழந்தைகளை பிச்சை எடுக்க வைத்து பணம் ஈட்டி வருகிறது.குழந்தைகளைக் கடத்தும் கும்பல் இந்த காரியத்தில் அதிகம் ஈடுபட்டுவருகிறது. குழந்தை கடத்தல் தடுக்கப்பட, குழந்தைகளுக்கு எதிரான குற்றங்கள் தடுக்கப்பட, அந்த கயவர்கள் பிடிபடக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

◆ கடந்த மாதம் தூத்துக்குடி சிப்காட் பகுதியில் இலங்கைக்கு கடத்துவதற்காக வைக்கப்பட்டிருந்த 11 டன் விராலி மஞ்சள், 5.95 டன் பீடி இலைகள் கைப்பற்றப்பட்டன. தொடர்ந்து இலங்கைக்கு பல பொருட்கள் கடத்தப்படுவது பிடிபட்டுவருகிறது. பொருட்கள் கடத்துவது தடுத்து நிறுத்தப்பட, நீதியான முறையில் செயல்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**



◆ தமிழ்நாட்டில் ஆக்கிரமிப்பாளர்களால் வனப்பகுதிகள் அழிக்கப்பட்டு வருகிறது. தேனி மாவட்டத்தில் மாத்திரம் சுமார் 3,000 ஆக்கிரமிப்புகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. வன ஆக்கிரமிப்பால் வனங்கள் அழிகிறது, வன விலங்குகள் பாதிக்கப்படுகின்றன, அங்குள்ள பழங்குடி இன மக்கள் பாதிக்கப்படுகின்றனர். இந்த ஆக்கிரமிப்புகள் தடுக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**



◆ மத்திய பிரதேசம் டாடியா மாவட்டத்தில் சட்டவிரோத மதுபானம் தயாரிக்கும் வேலை அதிக அளவில் நடக்கிறது. தயாரிக்கப்படும் மதுவை சாலையில் குழிக்குள் வைத்து பாதுகாக்கின்றனர். அந்த மதுவை குடித்ததால் சிலர் மரித்துபோயினர். மேலும் பல மிருங்கள் மரித்துபோயின. இந்தக் கள்ள சாராய கலாச்சாரம் முற்றிலும் அழிய, அதனால் உண்டாகும் மரணங்கள் தடுக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

## உலக நாடுகளுக்காக ஜெபியுங்கள்!

## PRAY FOR WORLD

◆ கடந்த மாதம் வளர்ந்த நாடுகளுக்கு – அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மனி போன்ற நாடுகளுக்கு கொடிய மாதங்களாக அமைந்தது. வீரியம் கூடிய தொற்று நோய் கிருமிகளின் தாக்குதல் அதிகரித்துள்ளது. மனிதர்களால் உருவாக்கப்படும் இந்த காரியம் முற்றிலும் தடுக்கப்பட, விஷ கிருமிகள் அழிக்கப்பட, தேசங்களை ஒரு ஆளுகைக்குள் கொண்டு வர எத்தனிக்கிற சதித்திட்டங்கள் முறியடிக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

◆ சைப்ரஸ் நாட்டில் 14 வயது நிரம்பின பள்ளி மாணவன் திடீரென்று இரவு நேரத்தில் எழும்பி குடும்பத்தினரை சுட்டுவிட்டு தன்னையும் சுட்டு கொன்று விட்டான். சிந்தனையில் எழும்பின போராட்டம், வெறி குடும்பத்தையே அழித்துவிட்டது. இத்தகைய காரியங்களைத் தூண்டுகிற பொல்லாத ஆவியின் கிரியைகள் அழிக்கப்பட, மன அழுத்தத்தில் பாதிக்கப்படுகிற வாலிபர்கள் அதிலிருந்து விடுபட, மீட்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

FAMILY PRAYER POINTS

# குடும்பங்களுக்காக

## ஜெபியுங்கள்!



🔹 தற்போது அடுக்குமாடி குடியிருப்புகளில் வாழும் குடும்பங்கள் அதிகரித்து வருகிறது. ஒருபுறம் நன்மையாக இருந்தாலும், இதனை பிசாசானவன் பயன்படுத்தி தவறான உறவுகள் வளர தூண்டிவிடுகிறான். இதனால் சொந்த துணை, பிள்ளைகளை விட்டுவிட்டு வேறொருவருடன் குடும்பம் நடத்தும் சூழ்நிலை உருவாகிறது. இந்த அசுத்தமான காரியங்கள் முற்றிலும் தடைசெய்யப்பட, பரிசுத்தம் காக்கப்பட **ஜெபிப்போம்.**

🔹 தற்காலத்தில் குடும்ப வன்முறைகளால் பெண்பிள்ளைகள் மற்றும் பெண்கள் பாதிக்கப்படுவது அதிகரிக்கிறது. சொந்த இரத்தத்தை சீரழிக்கிற இந்த கொடிதான காரியங்கள் தடுக்கப்பட, அந்த முரட்டு சுபாவங்கள் முற்றிலும் அகன்று போகக் கருத்தாய் ஜெபிப்போம். பெண்கள் பாதுகாக்கப்பட **ஜெபிப்போம்.**

REVIVAL

# ஆவிக்குரிய எழுப்புதலுக்காக

## ஜெபியுங்கள்!

◆ எழுப்புதல் சபைகளிலிருந்து துவங்கப்பட உள்ளது. ஆகவே பொல்லாத சாத்தான் சபைகளின் தலைமை பீடத்தை பிடிக்க எத்தனிக்கிறான். ஒவ்வொருவரும் கருத்தாய் நமது சபைகளின் தலைவர்களுக்காக, அவர்களின் பாதுகாப்பிற்காக, தேவ ஞானத்தோடு செயல்பட, அந்நிய கிரியைகளை விட்டொழிக்கக் கருத்தாய் ஜெபிப்போம்.

ISRAEL PRAYER POINTS

# இஸ்ரேல்

## ஜெபக்குறிப்பு!

◆ இஸ்ரேல் தேசத்தில் பென்-குரியான் பல்கலைகழகத்தில் நடத்தப்பட்ட வலைதள தாக்குதல் இஸ்ரேல் தேசத்தின் கல்வி நிறுவனங்களை முடக்கும் என இஸ்ரேல் தேசிய வலைதள அமைப்புகளின் தலைவர் **திரு. யிகால் உன்னா** தெரிவித்துள்ளார். தொடர் வலைதள தாக்குதல் சம்பவங்கள் இஸ்ரேலின் நிலைபாட்டை தடுமாற பண்ணுகிறது. இந்த தாக்குதல்கள் தடுக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

◆ எருசலேமிலுள்ள சிதேக்கியா குகையில் செய்யப்படுகிற மந்திர கிரியைகள், அந்தகார கிரியைகள், தங்களது அந்தஸ்துகளையும், ஆஸ்திகளையும் பெருக்கி கொள்வதற்காக செய்யப்படுகின்ற அருவருப்பான கிரியைகள், அசுத்தங்கள் எல்லாம் அழிக்கப்பட, தடுக்கப்பட, அங்கே கூடும் வர்த்தக கூட்டம் சிதறடிக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**



# பலவானை முந்தி கட்டுவோம்!



◆ ஊழியர்களை, ஊழியங்களை, சபைகளை வஞ்சித்து, சேதப்படுத்துகிற லூசிபரின் கிரியைகள் அழிக்கப்பட ஜெபியுங்கள். அவன் மேற்கொள்ளாதபடி ஆவியில் நிறைந்து அவனை கட்டி **ஜெபியுங்கள்.**

◆ இயேசு கிறிஸ்துவின் நாமத்தை தரித்துக்கொண்டு, கிறிஸ்துவிற்கு விரோதமாக செயல்பட எத்தனிக்கிற, தூண்டுகிற அந்தி கிறிஸ்துவின் ஆவி கட்டப்பட **ஜெபியுங்கள்.**

# உலக நாடுகளுக்காக

## ஜெபியுங்கள்!

WEEK 4

பிப்ரவரி 26 முதல், மார்ச் 4 வரை.

PRAY FOR WORLD

🔹 துருக்கி தேசத்தில் கடந்த 10 ஆண்டுகளில் இல்லாத கடுமையான வறட்சி உருவாகி உள்ளது. வளர்ச்சி இல்லாத நிலை மற்றும் மோசமான மழைப்பொழிவு அத்தேச தலைநகர் இஸ்தான்புல்லை வருகிற மார்ச் இறுதியில் தண்ணீர் இல்லாத நகரமாக மாற்ற போகிறது என இஸ்தான்புல் தொழில் நுட்ப பல்கலைக்கழகக் கல்வியாளர் கூறி உள்ளார். 1 கோடியே 70 லட்சம் ஜனங்கள் வசிக்கும் இந்த நகரம் ஒரு பேரழிவை சந்திக்க இருக்கிறது. துருக்கியில் நிலவும் இந்த வறட்சி தன்மை மாறி, மழை பொழிய, அத்தேசத்து ஜனங்களும், விவசாயமும் காப்பாற்றப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

🔹 கடந்த மாதம் ஜப்பான் தேசத்தில் கடுமையான பனி புயல் வீசியது. நூற்றுக்கணக்கான வாகனங்கள் இதனால் விபத்துக்குள்ளாயின. பனி புயல் 100 கிலோ மீட்டர் வேகத்தில் வீசி உள்ளது. கடைசி காலத்தின் அடையாளங்களாகிய இத்தகைய தாக்குதல்கள் பல்வேறு தேசங்களில் பரவாதவாறு, இயற்கை சீற்றத்தால் பாதிப்புகள் ஏற்படாமல் தடுக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**



# ஜெபக் குறிப்புகள்!




உலகம் முழுவதும் புத்தாண்டு கொண்டாட்டங்களால் அதிக பாதிப்பு வாலிபர்கள் மத்தியில் உண்டாகி உள்ளது. ஆஸ்திரேலியாவில் இளம் சிறுமிகள் களியாட்டினால் துஷ்பிரயோகம் செய்யப்பட்டுள்ளனர். போஸ்னியா மற்றும் ஹெர்சகோவினாவில் புத்தாண்டு கொண்டாட்டத்தில் ஈடுப்பட்ட 8 இளைஞர்கள் சடலமாக மீட்கப்பட்டுள்ளனர். மேலும் இத்தாலியில் களியாட்டுகளில் பயன்படுத்தப்பட்ட பட்டாசு உபயோகத்தால் கொத்து கொத்தாக பறவைகள் செத்து விழுந்தன. இத்தகைய தீங்கை விளைவிக்கும் களியாட்டுகள் முற்றிலும் தடுக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**



புதிய வகை கொரோனா தொற்றும் உலக அளவில் வேகமாக பரவி வருகிறது. பழைய தொற்றை காட்டிலும் 70% அதி தீவிரமாகவும், வீரியம் மிகுந்ததாகவும் பரவுகிறது. அவைகள் அழிக்கப்பட்டுபோகக் கருத்தாய், யுத்தம் பண்ணி ஜெபியுங்கள். அதனை பரப்புகிறவர்கள் அழிக்கப்பட்டுபோக ஜெபியுங்கள். இந்த புதிய வைரஸின் தாக்குதல் முற்றிலும் அழிக்கப்பட நிர்மூலமாக்கப்பட ஜெபியுங்கள். இந்த பாதிப்புகளை காணும்போது ஜனங்கள் தங்கள் பாவ வழிகளை விட்டு மனந்திரும்பி தேவனிடம் திரும்ப **ஜெபியுங்கள்.**

ஆப்ரிக்கா கண்டத்தின் வட பகுதியில் அமைந்திருக்கும் சகாரா பாலைவனம் கால நிலை மாற்றத்தால் பனிப் பொழிவு ஏற்பட்டு வெண் நிறமாக மாறி உள்ளது. பொதுவாக 25 முதல் 30 டிகிரி செல்சியஸ் என்ற அளவில் இருக்கும் நலை மாறி மைனஸ் 3 டிகிரியை எட்டி உள்ளது. இந்த இயற்கை சூழல், உயிரினங்களுக்கு ஆபத்தானதா என்று அறிவியலாளர்கள் ஆராய்கிறார்கள். கடைசி காலத்தின் அடுத்த அடையாளமாக இது விளங்குகிறது. இந்த மாற்றத்தால் அழிவுகள் ஏற்படக்கூடாது எனக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

அடுத்த ஆபத்து பூச்சி இனங்களுக்கு மனிதர்களால் உருவாகி உள்ளது. ஒவ்வொரு ஆண்டும் 2% பூச்சிகள் மனிதனின் செயல்பாட்டால்



அழிகின்றன. இது சுற்று சூழல் அமைப்புகளை பெரிதும் பாதிக்கும். கர்த்தர் கொடுத்த இயற்கை வளங்களை மனிதன் அழிக்கிறான். அவைகள் தடுக்கப்பட, மனிதன் மனம் திரும்பக் கருத்தாய் கர்த்தரிடம் **ஜெபிப்போம்.**

இந்தியாவில் தனியாக வசிக்கும் இந்தியர்கள் மத்தியில் டேட்டிங் கலாச்சாரம் அதிகரித்து வருகிறது. அதிலும் Virtual Dating (மெய் நிகர் டேட்டிங்) இக்காலத்தில் பெருகி வருகிறது. இதனால் வாலிபர்**களின்** சிந்தனை கறைபடுகிறது. வீணான சிந்தைக்கு உட்படுகின்ற**னர்.** இளைஞர்களை சீரழிக்கும் இந்தப் பொல்லாத கலாச்சாரம் முற்றிலும் அழிக்கப்பட, இதற்கு அடிமைபட்டவர்கள் அதிலிருந்து விடுதலை அடையக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

ஆலயத்தின் பரிசுத்தம் வர வர குறைந்து வருகிறது. காலணியை அணிந்து கொண்டு, அலைபேசியில் பேசிக்கொண்டு உள்ளே நுழையும் கலாச்சாரங்கள் பெருகி வருகிறது. கர்த்தருடைய வார்த்தை அறிவிக்கும் போது, கைபேசியில் விளையாட்டுகளில் ஈடுப**டுவது** அதிகரித்து வருகிறது. இத்தகைய கிரியைகள் அழிக்கப்பட, தடுக்கப்படக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

கடந்த மாதம் டில்லி விமான நிலையில் வெளிநாட்டியிலிருந்து வந்த இருவரிடம் இருந்து 68 கோடி மதிப்பான ஹெராயின் போதை பொருள் பிடிப்பட்டது. போதை கடத்தல்கள் தடுக்கப்பட, கடத்தல்காரர்கள் மனந்திரும்ப கருத்தாய் **ஜெபிப்போம்.**

## பலவானை முந்தி கட்டுவோம்!



தேசத்தில் அருவருப்பான காரியங்களை செய்ய தூண்டுகிற ஆவிகளின் கிரியைகள் அழிக்கப்பட **ஜெபிப்போம்.**

தேசத்தில் தீவிரவாத கிரியைகளை தூண்டுகிற முரட்டு இனத்தின் ஆவி கட்டப்பட, தேசத்தை விட்டு தீவிரவாதம் விலக **ஜெபிப்போம்.**

# குடும்பங்களுக்காக ஜெபியுங்கள்!

FAMILY PRAYER POINTS



◆ குடும்ப உறவுகளுக்கு பெயர் பெற்ற இந்தியாவில், தற்போது ஒன்றுக்கு மேற்பட்ட துணையோடு வாழும் கலாச்சாரம் அதிகரித்து வருகிறது. இந்த இச்சையான, கேவலமான செயல்பாடுகள் தடுத்து நிறுத்தப்பட, குடும்ப உறவுகள் பரிசுத்தமடையக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

◆ குடும்பங்களில் தற்போது பெற்றோர் பிள்ளைகளிடம் உள்ள அன்பு தணிந்து வருகிறது. பணம், பொருளை சேர்ப்பதற்காக பிள்ளைகள் கேட்பாரற்று செல்கின்றனர். இதனால் இளம் தலைமுறையிடம் பாவ பழக்கங்கள் பெருகி வருகிறது. இளைய தலைமுறை சீர்கெடுக்கப்படுகிறது. அவைகள் தடுக்கப்பட, பிள்ளைகள் பாதுகாக்கப்பட்டு, கர்த்தருடைய திட்டத்தில் வளரக் கருத்தாய் **ஜெபிப்போம்.**

# ஆவிக்குரிய எழுப்புதலுக்காக ஜெபியுங்கள்!

REVIVAL

◆ ஊழியக்காரர்களின் குடும்ப உறுப்பினர்களின் சுகத்திற்காக, நல் நடத்தைக்காகக் கருத்தாய் **ஜெபிப்போம்.** ஊழியத்தின் ஓட்டத்தை தடுக்க பிசாசு எத்தனிக்கிற இந்த பொல்லாத திட்டம் தடுத்து நிறுத்தப்பட ஜெபிப்போம்.



# இஸ்ரேல் ஜெபக்குறிப்பு!

ISRAEL PRAYER POINTS

◆ இஸ்ரேல் தேசத்தில் நடைபெறபோகிற 24வது தேர்தல், அதாவது கடந்த 2 ஆண்டுகளில் தொடர்ந்து 4வது முறையாக தேர்தல் நடைபெற இருக்கிறது. இதுவும் ஒரு திடனான முடிவை கொண்டுவராது என அநேகர் பயப்படுகின்றனர். நடைபெற போகிற தேர்தலில் கர்த்தர் கிரியை செய்து, தீர்க்கமான முடிவு உண்டாக, எழுப்புதலுக்கு காரணமானவர்கள் தலைமை பீடத்தில் அமரக் **ஜெபிப்போம்.**

◆ இஸ்ரேலில் உள்ள பெட்டா திக்வா என்கிற இடத்திலுள்ள இரண்டு ஜெப ஆலயங்கள் சூறையாடப்பட்டு, அங்குள்ள தோராக்கள் கிழிக்கப்பட்டுள்ளன. ஜெப ஆலையங்களில் நடைபெறும் தாக்குதல்கள் உலகம் முழுவதும் யூத வெறுப்பாளர்களாலும், திருடர்களாலும் நடத்தப்படுகிறது. அவைகள் தடுக்கப்பட ஜெப ஆலயங்கள் பாதுகாக்கப்படக் கருத்தாய் ஜெபிப்போம்.







# செய்திகள்!

## மூளைக்குச் செல்லும் ரத்தத்தின் போக்கை முறைப்படுத்தும் ஸ்டென்ட்: முதன் முறையாக இந்தியாவில் கண்டுபிடிப்பு!

ரத்த குழாய்களிலிருந்து மூளைக்குச் செல்லும் ரத்தத்தின் போக்கை முறைப்படுத்தும் ஸ்டென்ட், இதயத்தின் அடைப்பை குணப்படுத்தும் கருவி. முதன் முறையாக இந்தியாவில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.



மூளைக்கு ரத்தத்தை முறையாக செலுத்துவதற்கு பலூனிங் என்ற முறையின் வாயிலாக ரத்தக் குழாய்களை விரிவடையச் செய்வதில் ரத்தத்தின் போக்கை கட்டுப்படுத்தும் விதமாக, முதன்முதலாக உள்நாட்டிலேயே தயாரிக்கப்பட்ட ஸ்டென்ட் கருவியையும், இதயத்தில் ஏற்பட்டுள்ள அடைப்பை குணப்படுத்துவதற்கான கருவியையும், இந்தியர்கள் விரைவில் பெறவிருக்கிறார்கள். (Hindu Tamilthisai, 2021 Jan 18 ).

பெண்களுக்கு பாதுகாப்பு இல்லாத இடங்களில்

## அவசரகால பட்டன்!

சென்னை: பெண்களுக்கு பாதுகாப்பு இல்லாத இடங்களில் அவசரகால பட்டன் வசதியுடன் 1600 ஸ்மார்ட் கம்பங்கள் நிர்பயா திட்டத்தின் கீழ் சென்னையில் அமைக்கப்படுகிறது. நிர்பயா நிதியின் கீழ் சென்னையில் பெண்களின் பாதுகாப்பிற்காக ரூ. 425 கோடியில் பல்வேறு திட்டங்கள் செயல்படுத்தப்படுகிறது. இந்நிலையில் சென்னையில் பெண்களுக்கு பாதுகாப்பு இல்லாத இடங்களில் ஸ்மார்ட் கம்பங்கள் அமைக்ககப்பட உள்ளது.

இதன்படி ரூ. 95 கோடி செலவில் 1,605 கம்பங்கள் அமையும். இது தொடர்பாக மாநகராட்சி அதிகாரிகள் கூறியதாவது: அவசரகால பட்டன், சிசிடிவி கேமரா, எல்இடி விளக்குகள் ஸ்மார்ட் கம்பத்தில் அமைந்திருக்கும்.

பெண் ஒருவர் தான் ஆபத்தில் இருப்பதை இந்த கம்பத்தில் உள்ள பட்டனை அழுத்தி தெரிவித்தால். உடனே அந்த கம்பத்தில் உள்ள கேமரா 180 டிகிரி கோணத்தில் சுழன்று சுழன்று படம் எடுக்கும். மாநகராட்சியில் உள்ள ஒருங்கிணைந்த கட்டளை மற்றும் கட்டுப்பாட்டு அறைக்கு உடனே தெரிவிக்கும்.

அது காவல் கட்டுப்பாட்டு அறைக்கும், அருகில் உள்ள காவல் நிலையத்துக்கும், காவல் ரோந்து வாகனங்களுக்கும் தகவல் தெரிவிக்கும்.

குறுகிய நேரத்தில் தொடர்புடைய இடத்துக்கு போலீசார் வந்துவிட முடியும். கேமரா எடுத்த படங்கள் உதவியுடனும், குற்றவாளிகளை அடையாளம் காணமுடியும். இதன் மூலம் பெண்கள் மற்றும் குழந்தைகளின் பாதுகாப்பு உறுதி செய்யப்படும். இவ்வாறு அதிகாரிகள் கூறினர்.

Registered with Registered News Paper of India No: TNTAM/2001/06190.
Postal Registration No: TTN/249/2021-2023.
Date of Publication: 25-01-2021.
Date of Posting: 27th to 30th of every month.
Office of Posting: BPC, Thoothukudi HPO- 628 001.
Licensed to Post Without Prepayment No: TN/WPP-66/SR/2021-2023.

## எழுப்புதல் ஜெப பங்காளர் திட்டம்! *(Revival Prayer Partner)*

கர்த்தராகிய தேவன் அனுப்பப் போகிற மகிமையான எழுப்புதல் நமது தேசத்தில் பற்றியெரிய ஒரே வழி, நமது ஜெபத்தை அதிகரிப்பதுதான். **ஒவ்வொருவரும் எழுப்புதலுக்காக உத்திரவாதம் எடுத்து ஜெபிக்க வேண்டுமென்பது, தேவனுடைய விருப்பம்.**

இதைக் குறித்து, **'ஜெபிக்கலாம் வாங்க!'** நேரலையில் பகிர்ந்து கொண்டு அழைப்புக் கொடுத்தபோது, சுமார் **ஒரு லட்சம் தேவ பிள்ளைகள் தினந்தோறும் ஒருமணி நேரம் தேசத்திற்காக ஜெபிக்க தங்களை அர்ப்பணித்தார்கள்.** அவர்கள் கருத்தாக ஜெபிப்பதற்கு வசதியாக, **ஜெபக் கையேடு ஒன்று தயாரித்து அனுப்பி** இருக்கிறோம்.

**உங்களுக்கு தெரிந்த** யாராகிலும் **இந்த எழுப்புதல் ஜெப பங்காளராக இணைந்து கொள்ள விரும்பினால்,** எங்களோடு **தொடர்பு கொள்ளுங்கள்.**

அவர்களுக்கு ஜெபக் குறிப்புகள் அடங்கிய ஒரு புத்தகம் அனுப்பி வைப்போம். மேலும், **www.comfortertv.com** என்கிற இணையத் தளத்தில் **download** செய்து கொள்ளலாம்.

## எழுப்புதல் வீட்டு ஜெபக் குழு!

*(Revival House Prayer Group)*

நாம் தனியாக ஜெபிப்பது மாத்திரமல்ல, **குழுவாக ஜெபிப்பதும் அவசியமாயிருக்கிறது.** ஆதித் திருச்சபையில், வீடுகள்தோறும் தேவ பிள்ளைகள் கூடி ஜெபம் பண்ணினார்கள். எனவே, **நாமும் ஒரு பகுதியிலுள்ள ஐந்து குடும்பத்தினராகவோ, அல்லது பத்து குடும்பத்தினராகவோ வாரத்தில் ஒருநாள், ஒரு வீட்டில் கூடி ஜெபிக்க வேண்டும்.**

இதுவரை சுமார் **8,000 ஜெபக் குழுவினர்** பதிவு செய்து, ஜெபித்து வருகிறார்கள். அவர்களுக்கு இதைக் குறித்த விபரங்கள் மற்றும் ஜெபக் குறிப்புகள் அனுப்பி வைத்திருக்கிறோம். **நீங்களும் இத்திட்டத்தில் இணைந்து ஜெபிக்க விரும்பினால், எங்களோடு தொடர்பு கொள்ளுங்கள்.** இதைக் குறித்த விபரங்களையும், ஜெபக் குறிப்புகளையும் உங்களுக்கு அனுப்பி வைப்போம்.

### குறிப்பு:

இத்திட்டத்தில் இணைந்து கொள்ள revival.jesusredeems.com என்ற இணையதள பக்கத்தில் பதிவு செய்யவும் அல்லது **+91 7010734341** என்ற Whatsapp எண்ணிற்கு "ADD ME" என்று Message அனுப்பவும். அனுப்பிய பின்னர் Link ஒன்று அனுப்புவோம். அதை Click செய்து உங்கள் விபரங்களை தெரியப்படுத்துங்கள்.

**For Contact: Phone: 04639-220022**

+91 70107 34341

**Email: revival@jesusredeems.org**



Owned and Published by J. Selvakumar from Jesus Redeems, Nalumavadi-628 211 and Printed by Mrs.Joyce Lazarus at Angel Press, 13/81-A, Lakshmipuram, Nalumavadi-628 211. EDITOR J. SELVAKUMAR